क्रीडोद्यानं விளையாட்டுப் பூங்கா पिहिताः மூடப்பட்டவையாக सम्मर्दः கூட்டம், நெருக்கடி विनोदनैः விளையாட்டுக்களால், விளையாட்டுக் கருவிகளால் अतृप्ताः மன நிறைவு பெறாதவர்களாக क्रीडितुं விளையாட शक्यन्ते முடியும் प्रांगणे பெரும் அங்கணத்தில் (வீடு அல்லது ஏதேனும் ஒரு கூடத்தின் முன்னுள்ள விரிந்த இடம்) कूर्दनं குதித்து விளையாடுதல் धावनं ஓடி விளையாடுதல் उत्प्लवनं எம்பிக்குதித்து விளையாடுதல் कपर्दी பலிங்சடுகுடு-கபடி पादकन्दुकं கால்பந்து कन्दुकोत्क्षेपः எறிபந்து वीटा கிரிகெட்டு प्रतिविरामकालं ஒவ்வொரு விடுமுறை நாட்களிலும் क्रीडाप्रतियोगः விளையாட்டுப்போட்டி (மாட்ச்) दले இரு போட்டியிடும் அணிகள் खेलकाः விளையாட்டு வீரர்கள் समापतन्ति கூடுகிறார்கள் प्रेक्षकाः பார்வையாளர்கள் क्रीडतां விளையாடுபவர்களுடைய व्यवस्थां கட்டுப்பாட்டை निर्णयति தீர்மானிக்கிறான் अव्यवस्थां கட்டுப்பாடின்மையை निर्दिशति சுட்டிக்காட்டுகிறான் उपचीयते சேர்கிறது स्फूर्तिः சுறு சுறுப்பு श्रमसहने கடும் உழைப்பை — களைப்பைத் தாங்குவதில் प्रत्यङ्गानि சிறு உறுப்புக்கள் नवनवतया புதிது புதிதாக सचः உடன் पटुता திறமை पदे पदे ஒவ்வோர் அடியிலும், ஒவ்வொரு சமயத்திலும், அடிக்கடி चतुरता சாமர்த்தியம் सूक्ष्मदर्शिता நுண்ணிய நோக்கு प्रत्युत्पन्ना मतिः நெருக்கடிகளை சமாளிக்கும் அறிவு प्रदर्शनीया வெளிக்காட்ட வேண்டியதாக समयस्य ஒழுங்கு முறையின் अनुशासनस्य பொது நியமத்தின் अनुगमनं அடங்கிச் செல்லுதல் श्रमसहिष्णुता கடும் உழைப்பைத் தாங்கும் சக்தி साहसं திடீர் செயலாற்றல் रञ्जनं களிப்பித்தல்.

பயிற்சி: 1 இந்தக் கட்டுரையில் சில இடங்களில் ஸந்தி சேர்ந்தும் சில இடங்களில் ஸந்தி சேராமலும் உள்ளது. சேராத்தைச் சேர்க்கவும். சேர்ந்ததைப் பிரிக்கவும்.

2. वर्धते, प्रसरति, विद्यते, समायान्ति, वर्तन्ते, गच्छावः என்ற நிகழ்கால வினைச்சொற்களின் மற்ற மூன்று புருஷன்களில் உள்ள உருவங்களை எழுதுக.

3 முழுவதையும் தமிழில் மொழிபெயர்த்து எழுதவும்.

4 இதில் உள்ள ஏதேனும் 4 வாக்கியங்களைச் சிறிது மாற்றித் தங்கள் சொந்த நடையில் எழுதுங்கள்.

## षड्विंशः पाठः பாடம் 26

न என்ற எழுத்தில் முடியும் சப்தங்களின் முக்கியமான வகை மூன்று. गुण - बल - धन- मन्त्र போன்ற சொற்களின் மேல் इन् என்ற விகுதி சேர்ந்து गुणिन् धनिन् बलिन् मन्त्रिन् போன்ற சொற்கள் குணமுடையவன், பொருளுடையவன், வலிமையுடையவன், மந்திரமுடையவன் என்ற பொருளில் வருகின்றன. यशस्, तपस्, मेधा போன்ற சொற்களின் மேல் विन् விகுதியைச் சேர்த்து यशस्विन् புகழுடையவன், तपस्विन् தவமுடைவன், मेधाविन् மேதையுடையவன் போன்ற சொற்கள் வருகின்றன. இவை முதல் வகை. இவற்றின் முதல் வேற்றுமை ஒருமையில் इन् என்பது ई என்று மாறுகிறது.

१. नकारान्तः पुंलिगः गुणिन् शब्दः (குணமுடையவன்)

| | | |
|---|---|---|
| गुणी | गुणिनौ | गुणिनः |
| गुणिनं | गुणिनौ | गुणिनः |
| गुणिना | गुणिभ्यां | गुणिभिः |

7-ம் வேற்றுமை பன்மை गुणिषु

वनमाली गदी शार्ङ्गी शङ्खी चक्री च नन्दकी ।
श्रीमान् नारायणो विष्णुः वासुदेवोऽभिरक्षतु ॥

இந்த செய்யுள் விஷ்ணுஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தில் வரும் பிரார்த்தனை. नारायणः विष्णुः वासुदेवः என்ற மூன்று சொற்களும் விஷ்ணுவைக் குறிக்கின்றன. ஆனால் अभिरक्षतु (காப்பாற்றட்டும்) என்ற வினைச்சொல்லுக்கு ஏதாவது ஒரு சொல்லைத்தான் எழுவாயாகக்கொள்ள முடியும். எனவே மற்ற இரு சொற்கள் அடைமொழிகளாகின்றன. विष्णुः எங்கும் வியாபித்து நின்ற वासुदेवः வசுதேவர் மைந்தனை नारायणः अभिरक्षतु நாராயணன் காப்பாற்றட்டும் என்று பொருள் கூற வேண்டும். இங்கு वनमाली गदी शार्ङ्गी शङ्खी चक्री नन्दकी என்ற சொற்கள் नकारान्त சப்தங்களுக்கு எளிதில் உதாரணம் என்பதை நினைவில் வைக்கலாம் वनमालिन गदिन् शार्ङ्गिन् शङ्खिन् चक्रिन्, नन्दकिन् என்பவை சப்தங்கள். नन्दकं என்று பகவானுடைய கத்திக்குப் பெயர்.

## २. नकारान्तः पुलिंगः तपस्विन् शब्दः

| | | |
|---|---|---|
| तपस्वी | तपस्विनौ | तपस्विनः |
| तपस्विनं | तपस्विनौ | तपस्विनः |
| तपस्विना | तपस्विभ्यां | तपस्विभिः |

7-ம் வேற்றுமை பன்மை तपस्विषु

இரண்டாவது வகையைப் பார்ப்போம். आत्मन् (ஆத்மா) महात्मन् (மஹாத்மா) ब्रह्मन् (பிரம்மா) अर्वन् (குதிரை) यक्ष्मन् (க்ஷயரோகம்) போன்ற சொற்கள் இவ்வகையைச் சேர்ந்தவை. இதில் முதல் வேற்றுமையிலும் இரண்டாம் வேற்றுமை ஒருமை இருமைகளிலும் आत्मा आत्मानौ... .... என்ற நெடிலுடன் கூடிய ரூபங்கள் காணப்படுகின்றன.

नकारान्तः पुंलिंगः आत्मन् शब्दः

| | | |
|---|---|---|
| आत्मा | आत्मानौ | आत्मानः |
| आत्मानं | आत्मानौ | आत्मनः |
| आत्मना | आत्मभ्यां | आत्मभिः |

*7-ம் வேற்றுமை பன்மை* आत्मसु

४ नकारान्तः पुंलिंगः यक्ष्मन् शब्दः

| | | |
|---|---|---|
| यक्ष्मा | यक्ष्माणौ | यक्ष्माणः |
| यक्ष्माणं | यक्ष्माणौ | यक्ष्मणः |
| यक्ष्मणा | यक्ष्मभ्यां | यक्ष्मभिः |

*7-ம் வேற்றுமை பன்மை* यक्ष्मसु

यक्ष्मन् *சப்தத்தில்* न् *என்பது* ण् *என்று மாறும்.*

*மூன்றும் வகையைப் பார்ப்போம்.* राजन् पूषन् *போன்ற சொற்கள் இவ்வகையைச் சேர்ந்தவை.*

नकारान्तः पुंलिंगः राजन् शब्दः *அரசன்*

| | | |
|---|---|---|
| राजा | राजानौ | राजानः |
| राजानं | राजानौ | राज्ञः |
| राज्ञा | राजभ्यां | राजभिः |
| राज्ञे | राजभ्यां | राजभ्यः |
| राज्ञः | राजभ्यां | राजभ्यः |
| राज्ञः | राज्ञोः | राज्ञां |
| राज्ञि-राजनि | राज्ञोः | राजसु |
| हे राजन् | हे राजानौ | हे राजानः |

*இங்கு சில இடங்களில்* राजन् *என்ற சொல்லில்* ज *வில் உள்ள உயிர் எழுத்து* 'अ' *மறைகிறது.* ज्+न् *சேர்ந்து* ज्ञ *என்று ஆகிறது.* पूषन् *சப்தத்தில்* ष *விலுள்ள* अ *மறைந்து* ष् + ण् ष्ण् *என்று ஆகும். ஆகவே* पूष्णः पूष्णा पूष्णे पूष्णः पूष्णः पूष्णोः पूष्णां पूष्णि पूष्णोः *என்ற ரூபங்களில் வரும். 7-ம் வேற்றுமை ஒருமையில்* राज्ञि, राजनि, पूष्णि पूषणि *என்று இரு ரூபங்கள் உண்டு.*

*பயிற்சி 1 : தமிழில் மொழி பெயர்க்கவும்.*

दशरथः रामं राजानं कर्तुं ऐच्छत्।

सर्वं वस्तु आत्मनः कामाय सृष्टम्।

उद्धरेत् आत्मना आत्मानम्।

महात्मना गान्धिना अहिंसया स्वाराज्यं संपादितम्।

अर्वणः पादेषु एकैकः शफः वर्तते।

अद्यत्वे राज्येषु मन्त्रिणां शासनं अस्ति।

एकेन तेजस्विना सूर्येण जगत् प्रकाशते।

मनस्विनि रामे प्रजाः अस्निह्यन्।

*பயிற்சி 2: ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கவும்.*

1. குடையுடன் இருப்பவர் என் மாமன்.
2. முண்டாசுடன் கூடிய சிப்பந்தி எங்கோ போகிறான்.
3. கவசமணிந்த சிப்பாய்கள் எங்கும் நிற்கிறார்கள்.
4. அரசர்கள் அரண்மனைகளில் வசித்தனர்.
5. நாரதர் தவசியான வால்மீகியின் ஆசிரமம் வந்தார்.
6. பலமுள்ளவனை எல்லோரும் பின்பற்றுகிறார்கள்.
7. க்ஷயத்தால் பீடிக்கப்பட்டவர்கள் செங்கிப்பட்டி கிராமத்துக்கோ மதனப்பள்ளி நகரத்துக்கோ செல்கிறார்கள்.
8. சூர்யனுடைய கிரணங்கள் உஷ்ணமாக உள்ளன.

छत्रं குடை उष्णीषः முண்டாசு कवचं கவசம். இச் சொற்களுடன் इन् விகுதியைச் சேர்த்து நகாராந்தச் சொற்களாக்கி உபயோகப்படுத்தவும். उद्धरेत् மேல் தூக்கிவிட வேண்டும்.

## सप्तविंशः पाठः பாடம் 27

नकारान्त पुंलिंग சப்தங்களைப் பற்றிப் படித்தோம். नकारान्त स्त्रीलिंगச் சொற்கள் வழக்கில் இல்லை. இப்பாடத்தில் நபும்ஸகலிங்கச் சொற்களைப் பற்றிப் படிப்போம். பும்லிங்கத்தில் வந்த गुणिन् यशस्विन् போன்ற इन् विन् விகுதிகளில் முடிந்த சப்தங்கள் நபும்ஸகலிங்கத்திலும் சாதாரணமானவையே. கீழே உதாரணம் தரப்படுகிறது.

१ नकारान्तः नपुंसकलिङ्गः गुणिन् शब्दः குணமுள்ள

| | | |
|---|---|---|
| गुणि | गुणिनी | गुणीनि |
| गुणि | गुणिनी | गुणीनि |
| गुणिना | गुणिभ्यां | गुणिभिः |

மற்ற விபக்திகளில் புல்லிங்க சப்தங்களின் ரூபங்களே.

२ नकारान्तः नपुंसकलिङ्गः यशस्विन् शब्दः புகழுடைய

| | | |
|---|---|---|
| यशस्वि | यशस्विनी | यशस्वीनि |
| यशस्वि | यशस्विनी | यशस्वीनि |
| यशस्विना | यशस्विभ्यां | यशस्विभिः |

மற்ற விபக்திகளில் புல்லிங்க சப்தங்களின் ரூபங்களே.

३ नकारान्तः नपुंसकलिङ्गः कर्मन् शब्दः செயல்

| | | |
|---|---|---|
| कर्म | कर्मणी | कर्माणि |
| कर्म | कर्मणी | कर्माणि |
| कर्मणा | कर्मभ्यां | कर्मभिः |

மற்ற விபக்திகளில் புல்லிங்க சப்தங்களின் ரூபங்களே.

४. नकारान्तः नपुंसकलिङ्गः नामन् शब्दः பெயர்.

| | | |
|---|---|---|
| नाम | नाम्नी/नामनी | नामानि |
| नाम | नाम्नी/नामनी | नामानि |
| नाम्ना | नामभ्यां | नामभिः |
| नाम्ने | नामभ्यां | नामभ्यः |
| नाम्नः | नामभ्यां | नामभ्यः |
| नाम्नः | नाम्नोः | नाम्नां |
| नाम्नि/नामनि | नाम्नोः | नामसु |
| हे नामन् | हे नाम्नी/नामनी | हे नामानि |

*குறிப்பு: இந்த சப்தம்* राजन् (पु) *சப்தத்தைப் போன்றது.* म *என்ற எழுத்திலுள்ள* अ *மறைவதால்* नाम्नि *என்று விசேஷ ரூபத்தையும் பெறுகிறது.* नामनि *என்பது சாதாரண ரூபம்.* धामन् *(ஒளி. இருப்பிடம்).* दाम *(கயிறு தும்பு) என்ற சப்தங்களையும்* नामन् *சப்தத்தைப் போல் சொல்ல வேண்டும்.*

*பயிற்சி 1: தமிழில் மொழி பெயர்க்கவும்.*

१ यशस्विनि इक्ष्वाकुकुले श्रीरामः अवतरति स्म।
२ वास्तुकर्मणि निपुणः एकः शिल्पी नगरे वसति।
३ 'नारायण' इति नाम्नि/नामनि चत्वारि अक्षराणि सन्ति।
४ श्रीराजगोपालाचार्यः 'राजाजी' इति नाम्ना प्रसिद्धः।
५ यशोदा श्रीकृष्णं दाम्ना उदरे बबन्ध। अतः दामोदरः इति नाम।
६ गोष्ठेषु गावः वृषभाश्च पृथक् दाम्नि/दामनि बद्धाः, पंक्तिशः तिष्ठेयुः।
७ केरलेषु नालिकेरतन्तुभिः पादन्यासनानि दामानि महादामानि मार्गास्तरणानि च कुर्वन्ति।
८ दाम्नां निर्माणमेव तत्र बहूनां जीवनं भवति।

वास्तुकर्मणि *கட்டிடத்தொழிலில்* बबन्ध *கட்டினான்* बद्धः *கட்டப்பட்டு* पंक्तिशः *வரிசை வரிசையாய்* पादन्यासनानि *மிதியடிகள்* मार्गास्तरणानि *பாதை விரிப்புகள்.*

*பயிற்சி 2: ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்க்கவும்.*

1. *அர்ஜுனனுக்கு பல்குன: பார்த்த: முதலான 10 பெயர்கள் இருக்கின்றன.*
2. *ஒவ்வொரு நாளும் என் பெயரின் எழுத்துக்களை ஒவ்வொன்றாக எண்ணு.*
3. *சந்தனுவின் பிள்ளை தேவவ்ரதர். அவர் பீஷ்மர் என்ற பெயரால் பிரசித்தமானார்.*
4. *பெயரில் என்ன உள்ளது? செயலால்தான் மனிதன் உயர்ந்தவன் ஆகிறான்.*
5. *ராமர் தவசியான விசுவாமித்திரருடைய வேள்வியை ரக்ஷித்தார்.*

# अष्टाविंशः पाठः பாடம் 28

*முதல் 10 வரை உள்ள எண்களை முன்னர் படித்தோம். एक சப்தம் முதல் चतुर् சப்தம் வரை 3 லிங்கங்களிலும் ரூபங்கள் வேறுபடுகின்றன. पञ्चन् முதல் அவ்வாறு வேறுபடுவதில்லை. இப்போது 11 முதல் 100 வரை உள்ள எண்களுக்கான சொற்கள் அமைவதைக் கற்போம்.*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| दश | 10 | पञ्चत्रिंशत् | 35 | षष्टिः | 60 |
| एकादश | 11 | षट्त्रिंशत् | 36 | एकषष्टिः | 61 |
| द्वादश | 12 | सप्तत्रिंशत् | 37 | द्विषष्टिः | 62 |
| त्रयोदश | 13 | अष्टत्रिंशत् | 38 | त्रिषष्टिः | 63 |
| चतुर्दश | 14 | नवत्रिंशत् | 39 | चतुष्षष्टिः | 64 |
| पञ्चदश | 15 | चत्वारिंशत् | 40 | पञ्चषष्टिः | 65 |
| षोडश | 16 | एकचत्वारिंशत् | 41 | षट्षष्टिः | 66 |
| सप्तदश | 17 | द्विचत्वारिंशत् | 42 | सप्तषष्टिः | 67 |
| अष्टादश | 18 | त्रिचत्वारिंशत् | 43 | अष्टषष्टिः | 68 |
| नवदश | 19 | चतुश्चत्वारिंशत् | 44 | नवषष्टिः | 69 |
| विंशतिः | 20 | पञ्चचत्वारिंशत् | 45 | सप्ततिः | 70 |
| एकविंशतिः | 21 | षट्चत्वारिंशत् | 46 | एकसप्ततिः | 71 |
| द्वाविंशतिः | 22 | सप्तचत्वारिंशत् | 47 | द्विसप्ततिः | 72 |
| त्रयोविंशतिः | 23 | अष्टचत्वारिंशत् | 48 | त्रिसप्ततिः | 73 |
| चतुर्विंशतिः | 24 | नवचत्वारिंशत् | 49 | चतुस्सप्ततिः | 74 |
| पञ्चविंशतिः | 25 | पञ्चाशत् | 50 | पञ्चसप्ततिः | 75 |
| षड्विंशतिः | 26 | एकपञ्चाशत् | 51 | षट्सप्ततिः | 76 |
| सप्तविंशतिः | 27 | द्विपञ्चाशत् | 52 | सप्तसप्ततिः | 77 |
| अष्टाविंशतिः | 28 | त्रिपञ्चाशत् | 53 | अष्टसप्ततिः | 78 |
| नवविंशतिः | 29 | चतुःपञ्चाशत् | 54 | नवसप्ततिः | 79 |
| त्रिंशत् | 30 | पञ्चपञ्चाशत् | 55 | अशीतिः | 80 |
| एकत्रिंशत् | 31 | षट्पञ्चाशत् | 56 | एकाशीतिः | 81 |
| द्वात्रिंशत् | 32 | सप्तपञ्चाशत् | 57 | द्व्यशीतिः | 82 |
| त्रयस्त्रिंशत् | 33 | अष्टपञ्चाशत् | 58 | त्र्यशीतिः | 83 |
| चतुस्त्रिंशत् | 34 | नवपञ्चाशत् | 59 | | |

| | | | |
|---|---|---|---|
| चतुरशीतिः | 84 | पञ्चनवतिः | 95 |
| पञ्चाशीतिः | 85 | षण्णवतिः | 96 |
| षडशीतिः | 86 | सप्तनवतिः | 97 |
| सप्ताशीतिः | 87 | अष्टनवतिः | 98 |
| अष्टाशीतिः | 88 | नवनवतिः | 99 |
| नवाशीतिः | 89 | शतं | 100 |
| नवतिः | 90 | सहस्रं | 1000 |
| एकनवतिः | 91 | अयुतं | 10000 |
| द्विनवतिः | 92 | लक्षं | 100000 |
| त्रिणवतिः | 93 | प्रयुतं | 1000000 |
| चतुर्णवतिः | 94 | कोटिः | 10000000 |

*பயிற்சி: தமிழில் மொழி பெயர்க்கவும்.*

१. धृतराष्ट्रस्य शतं पुत्राः ।

२. मासस्य त्रिंशत् दिनानि ।

३. पक्षस्य पञ्चदश दिनानि ।

४. द्वादश मासाः संवत्सरः ।

५. दिनस्य चतुर्विंशतिः होराः ।

६. होरायाः षष्टिः निमेषाः ।

७. निमेषस्य षष्टिः क्षणानि ।

८. वर्षस्य त्रीणि शतानि पञ्चषष्टिश्च दिनानि ।

९. अर्चकः अष्टोत्तरं शतं नामानि वदन् देवं अर्चयति ।

(अष्टोत्तरं *8 உடன் கூடிய)*

*பயிற்சி: ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கவும்.*

*1. முருகனுக்கு 12 கைகள், 12 கண்கள்.*

*2. அவன் எனக்கு இரு நூறு ரூபாய்கள் கொடுத்தான்.*

*3. ஒரு நாளுக்கு 60 நாழிகைகள்.*

*4. ஒரு நாழிகைக்கு 60 விநாடிகள்.*

*5. ஒவ்வொரு புத்தகத்திலும் 100 பக்கங்கள் இருக்கின்றன*

6. ஒவ்வொரு வரியிலும் 42 எழுத்துக்கள் இருக்கின்றன.

7. சிவனது அடியார்கள் 64.

8. என் சம்பளம் 75 ரூபாய்கள்.

ரூபாய்கள் रूप्यकाणि। நாழிகைகள் नाड्यः। விநாடிகள் विनाड्यः। ஒவ்வொரு வரியிலும் प्रतिपङ्क्ति। அடியார்கள் भक्ताः। சம்பளம் वेतनं।

# नवविंशः पाठः — பாடம் 29

## संख्या — எண்கள் (2)

குறிப்பு: 1: 19, 29, 49 போன்ற சொற்களை 20ல் 1குறைந்தது, 30ல் 1 குறைந்தது, 40ல் 1 குறைந்தது, 50ல் 1 குறைந்தது என்பது போல் குறிப்பிடுவதுண்டு. அவ்வாறு குறிப்பிட "ऊन குறைந்த एकोन (एक+ऊन) ஒன்று குறைந்த" என்ற சொற்களை विंशतिः त्रिंशत् चत्वारिंशत् पञ्चाशत् என்ற எண்களுக்கு முன் சேர்த்து ऊनविंशतिः एकोनविंशतिः- 19, ऊनत्रिंशत् एकोनत्रिंशत्- 29, ऊनचत्वारिंशत् एकोनचत्वारिंशत्- 39, ऊनपञ्चाशत् एकोनपञ्चाशत्- 49 என்று குறிப்பிடுவார்கள்.

59, 69, 79, 89, 99, என்ற எண்களுக்கு ऊन एकोन என்ற சொற்களைச் சேர்த்து ஸம்ஸ்கிருத சொற்களை அமைக்கலாம். 19, 29 போன்ற ஒன்று குறைந்த எண்களைத் தவிர ஒன்றுக்கு மேற்பட்டுக் குறைந்த மற்ற எண்களைக் குறிப்பிட இம்முறையைக் கையாளுவதில்லை.

குறிப்பு 2: 'एक' ஒருமையில் மட்டும் ரூபங்கள் உண்டு. 'द्वि' இருமையில் மட்டும் ரூபங்கள் உண்டு. त्रि முதல் दश வரையில் பன்மையில் மட்டும் ரூபங்களுண்டு என்று முன்பு படித்தோம். 3 முதல் 18 வரை உள்ள எண்ணிக்கைச் சொற்கள் பன்மையில் வரும். नवदश என 19 ஐக்குறிப்பிடும்போது பஹுவசனச் சொல், एकोनविंशतिः எனக்குறிப்பிட்டால் ஏகவசநம். இதன்பின் नवविंशति முதலானவை ஏகவசனமே. 20 முதல் எண்ணிக்கைச் சொற்கள் ஒருமையில் தான் வரும். இவ்வாறு ஸம்ஸ்கிருத இலக்கணம்

கூறுகிறது. அதாவது विंशतिः त्रिंशत् போன்ற சொற்களுடன் பன்மை விகுதிகளைச் சேர்க்கக்கூடாது. ஒருமை விகுதிகளையே சேர்க்க வேண்டும். இதனைப் பார்ப்போம்.

வேற்றுமை:

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | विंशतिः | त्रिंशत् | चत्वारिंशत् | पञ्चाशत् |
| 2 | विंशतिं | त्रिंशतं | चत्वारिंशत् | पञ्चाशतं |
| 3 | विंशत्या | त्रिंशता | चत्वारिंशता | पञ्चाशता |
| 4 | विंशत्यै-तये | त्रिंशते | चत्वारिंशते | पञ्चाशते |
| 5 | विंशतेः | त्रिंशतः | चत्वारिंशतः | पञ्चाशतः |
| 6 | विंशतेः | त्रिंशतः | चत्वारिंशतः | पञ्चाशतः |
| 7 | विंशतौ-त्यां | त्रिंशति | चत्वारिंशति | पञ्चाशति |

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | षष्टिः | सप्ततिः | अशीतिः | नवतिः |
| 2 | षष्टिं | सप्ततिं | अशीतिं | नवतिं |
| 3 | षष्ट्या | सप्तत्या | अशीत्या | नवत्या |
| 4 | षष्ट्यै | सप्तत्यै | अशीत्यै | नवत्यै |
| 5 | षष्ट्याः | सप्तत्याः | अशीत्याः | नवत्याः |
| 6 | षष्ट्याः | सप्तत्याः | अशीत्याः | नवत्याः |
| 7 | षष्ट्यां | सप्तत्यां | अशीत्यां | नवत्यां |

विंशत्यौ विंशत्यः என்று இருமையிலும் பன்மையிலும் சொற்களை உபயோகப்படுத்தினால் இரண்டு இருபதுகள் மூன்று இருபதுகள் என்று பொருள்படும். गवां शते பசுக்களின் இரு நூறுகள் என்று பொருள்.

शतेषु जायते शूरः सहस्रेषु च पण्डितः ।
वक्ता दशसहस्रेषु दाता भवति न वा ॥

இச்செய்யுளில் शतेषु सहस्रेषु दशसहस्रेषु என்ற எண்கள் பன்மையில் வந்துள்ளன. பல நூறுகளில் — பல ஆயிரங்களில் — பல பத்தாயிரங்களில் என்று பொருள்படும். जायते (பிறக்கிறான்).

शूरः शतेषु जायते *(பல நூறுகளில் ஒருவன்.)*
पण्डितः सहस्रेषु जायते *(பல்லாயிரங்களில் ஒருவன்).*
वक्ता दशसहस्रेषु जायते *(பல பல்லாயிரங்களில் ஒருவன்).*
दाता भवति न वा।

मनुष्याणां सहस्रेषु कश्चित् यतति सिद्धये (गीता)

*மனிதர்களில் பல்லாயிரங்களில் ஒருவன் சித்தி அடைய முயல்கிறான்.*

## त्रिंशः पाठः — பாடம் 30

## संख्येयशब्दः — வரிசையைக் குறிக்கும் எண்கள்

*சென்ற பாடத்தில் எண்ணைக்குறிக்கும் சொற்களைக்* (Cordinals) *கற்றோம். அவை விசேஷணங்களாக* (Adjective) *வரும். 1 முதல் 4 வரையுள்ள எண்கள் 3 லிங்கங்களையும் 7 விபக்திகளையும் பெறும். 5 முதல் 3 லிங்கங்களிலும் வேறுபடாது என்று படித்தோம்.*

*இப்பாடத்தில் முதலாவது இரண்டாவது என்று வரிசையைக் குறிப்பிடும் சொற்களைக்* (Ordinals) *கற்போம். இவைகளுக்கும் விசேஷணங்களைப் போல் 3 லிங்கங்கள் 7 விபக்திகள் உண்டு. பும்லிங்கத்தில்* राम शब्द*த்தைப் போலவும் ஸ்திரீலிங்கத்தில்* रमा, गौरी *சப்தத்தைப் போலவும் நபும்ஸக லிங்கத்தில்* वन *சப்தத்தைப் போலவும் ரூபங்களைப் பெறும்.*

*உதாரணமாக:—*

*1வது முதல் 100வது வரை எண்களை மூன்று லிங்கங்களிலும் காண்க.*

| | | | | |
|---|---|---|---|---|
| *1* | *வது* | प्रथमः | प्रथमा | प्रथमं |
| *2* | *வது* | द्वितीयः | द्वितीया | द्वितीयं |
| *3* | *வது* | तृतीयः | तृतीया | तृतीयं |
| *4* | *வது* | चतुर्थः | चतुर्थी | चतुर्थं |

| | | | | |
|---|---|---|---|---|
| 5 | வது | पञ्चमः | पञ्चमी | पञ्चमं |
| 6 | வது | षष्ठः | षष्ठी | षष्ठं |
| 7 | வது | सप्तमः | सप्तमी | सप्तमं |
| 8 | வது | अष्टमः | अष्टमी | अष्टमं |
| 9 | வது | नवमः | नवमी | नवमं |
| 10 | வது | दशमः | दशमी | दशमं |

11 வது एकादशः
12 வது द्वादशः
13 வது त्रयोदशः
14 வது चतुर्दशः
15 வது पञ्चदशः
16 வது षोडशः
17 வது सप्तदशः
18 வது अष्टादशः
19 வது नवदशः

புல்லிங்கத்தில் एकादशः, ஸ்திரீலிங்கத்தில் एकादशी நபும் ஸகலிங்கத்தில் एकादशं. இதுபோல் नवदशः வரை புல்லிங்கத்தில் शः என்றும், ஸ்திரீலிங்கத்தில் शी என்றும், நபும்ஸகலிங்கத்தில் शं என்றும் முடியும்.

20 வது विंशः
21 வது एकविंशः
22 வது द्वाविंशः
23 வது त्रयोविंशः
24 வது चतुर्विंशः
25 வது पञ्चविंशः
26 வது षड्विंशः
27 வது सप्तविंशः
28 வது अष्टविंशः
29 வது नवविंशः
30 வது त्रिंशः
31 வது एकत्रिंशः
32 வது द्वात्रिंशः
33 வது त्रयस्त्रिंशः
34 வது चतुस्त्रिंशः
35 வது पञ्चत्रिंशः
36 வது षट्त्रिंशः
37 வது सप्तत्रिंशः
38 வது अष्टत्रिंशः
39 வது नवत्रिंशः
40 வது चत्वारिंशः
41 வது एकचत्वारिंशः

| | | | |
|---|---|---|---|
| 42 வது | द्विचत्वारिंशः | 51 வது | एकपञ्चाशः |
| 43 வது | त्रिचत्वारिंशः | 52 வது | द्विपञ्चाशः |
| 44 வது | चतुश्चत्वारिंशः | 53 வது | त्रिपञ्चाशः |
| 45 வது | पञ्चचत्वारिंशः | 54 வது | चतुष्पञ्चाशः |
| 46 வது | षट्चत्वारिंशः | 55 வது | पञ्चपञ्चाशः |
| 47 வது | सप्तचत्वारिंशः | 56 வது | षट्पञ्चाशः |
| 48 வது | अष्टचत्वारिंशः | 57 வது | सप्तपञ्चाशः |
| 49 வது | नवचत्वारिंशः | 58 வது | अष्टपञ्चाशः |
| 50 வது | पञ्चाशः | 59 வது | नवपञ्चाशः |

विंश முதல் नवपञ्चाशः வரை புல்லிங்கம், विंशा ஸ்திரீலிங்கம் विंशं நபும்ஸகலிங்கம் இவ்வாறு शः शा शं என்று முடியும்.

| | | | |
|---|---|---|---|
| 60 வது | षष्टितमः | 76 வது | षट्सप्ततितमः |
| 61 வது | एकषष्टितमः | 77 வது | सप्तसप्ततितमः |
| 62 வது | द्विषष्टितमः | 78 வது | अष्टसप्ततितमः |
| 63 வது | त्रिषष्टितमः | 79 வது | नवसप्ततितमः |
| 64 வது | चतुष्षष्टितमः | 80 வது | अशीतितमः |
| 65 வது | पञ्चषष्टितमः | 81 வது | एकाशीतितमः |
| 66 வது | षट्षष्टितमः | 82 வது | द्व्यशीतितमः |
| 67 வது | सप्तषष्टितमः | 83 வது | त्र्यशीतितमः |
| 68 வது | अष्टषष्टितमः | 84 வது | चतुरशीतितमः |
| 69 வது | नवषष्टितमः | 85 வது | पञ्चाशीतितमः |
| 70 வது | सप्ततितमः | 86 வது | षडशीतितमः |
| 71 வது | एकसप्ततितमः | 87 வது | सप्ताशीतितमः |
| 72 வது | द्विसप्ततितमः | 88 வது | अष्टाशीतितमः |
| 73 வது | त्रिसप्ततितमः | 89 வது | नवाशीतितमः |
| 74 வது | चतुस्सप्ततितमः | 90 வது | नवतितमः |
| 75 வது | पञ्चसप्ततितमः | 91 வது | एकनवतितमः |

| | | | |
|---|---|---|---|
| 92 வது | द्विनवतितमः | 98 வது | अष्टनवतितमः |
| 93 வது | त्रिनवतितमः | 99 வது | नवनवतितमः |
| 94 வது | चतुर्णवतितमः | 100 வது | शततमः |
| 95 வது | पञ्चनवतितमः | 1000 வது | सहस्रतमः |
| 96 வது | षण्णवतितमः | 10000 வது | अयुततमः |
| 97 வது | सप्तनवतितमः | 100000 வது | लक्षतमः |

षष्टितमः முதல் लक्षतमः வரை - तमः ஆண்பால், तमा பெண்பால், तमं நபும்ஸகலிங்கம்.

குறிப்பு : 19 முதல் 29, 39 முதலிய எண்களைக்குறிக்க ऊन அல்லது एकोन என்ற இரு சொற்களை அடுத்த பெரிய எண் அதாவது 20, 30 40 முதலிய எண்களுடன் சேர்க்கலாம் என்று சொன்னோம். அம்முறைப்படி 19 வது 29 முதலியவற்றைக் கீழே குறிப்பிடுகிறோம்.

19 வது एकोनविंशतितमः, ऊनविंशतितमः
29 வது एकोनत्रिंशत्तमः, ऊनत्रिंशत्तमः
39 வது एकोनचत्वारिंशत्तमः, ऊनचत्वारिंशत्तमः
49 வது एकोनपञ्चाशत्तमः, ऊनपञ्चाशत्तमः
இதுபோல் மற்றவைகளையும் அறியவேண்டும்.

பயிற்சி : தமிழில் மொழிபெயர்க்கவும்.

एकं बालकं एकां बालिकां च अत्र आनय।
एकं फलं नय।
एकस्मै बालकाय फलं वितर।
एकस्यै बालिकायै वस्त्राणि यच्छ।
द्वाभ्यां बालकाभ्यां धनं यच्छति।
द्वयोः बालिकयोः सीता मुख्या।

रामः द्वे फले आनयत्।

द्वयोः माणवकयोः रामः पटुतरः।

त्रीणि पुस्तकानि अत्र सन्ति।

तिस्रः गावः तृणं चरन्ति।

त्रयः सेवकाः तत्र कर्म कुर्वन्ति।

विष्णोः भुजाः चत्वारः।

ब्रह्मणः चत्वारि मुखानि।

अस्याः विद्यायाः चतस्रः शाखाः सन्ति।

महतां शीलानि पञ्च।

कुन्त्याः पञ्च पुत्राः।

आकाशे नव ग्रहाः सप्तविंशतिः नक्षत्राणि च सन्ति।

नवसु ग्रहेषु चन्द्रः मनोहरः।

सप्तविंशतौ नक्षत्रेषु रोहिणी चन्द्रस्य प्रियतमा।

नवसु व्याकरणेषु हनूमान् पण्डितः।

धर्मः अर्थः कामःमोक्षः इति चतुर्षु पुरुषार्थेषु धर्मः श्रेष्ठः।

रामः लक्ष्मणः भरतः शत्रुघ्नः इति चत्वारः दशरथस्य पुत्राः चत्वारः बाहव इव अभवन्।

पाण्डवेषु पञ्चसु धर्मपुत्रः प्रथमः।

माद्री पाण्डोः द्वितीया भार्या आसीत्।

वासुदेवः चतुर्थ्यां कक्ष्यायां पठति।

राधाकृष्णः भारतस्य द्वितीयो राष्ट्रपतिः।

रामः नवम्यां जातः, कृष्णः अष्टम्याम्।

विजयराघवः कक्ष्यापरीक्षायां उत्तीर्णेषु प्रथमः।

वार्षिकोत्सवे तस्य प्रथमं पारितोषिकं दत्तम्।

मम कक्ष्यायां त्रिंशं स्थानं राममूर्तिः लभते।

नवम्यां कक्ष्यायां अष्टसु वर्गेषु पञ्चशतं माणवकाः पठन्ति।

दशम्यां कक्ष्यायां प्रथमे वर्गे अष्टौ, द्वितीये वर्गे त्रयश्च पुरस्कारं लभन्ते।

सप्तम्यां कक्ष्यायां एकविंशा माणविका, अष्टम्यां कक्ष्यायां एकषष्टितमा माणविका च कन्दुकखेलायां पारितोषिकं लभते।

पक्षे पक्षे प्रथमा द्वितीया तृतीया चतुर्थी पञ्चमी इति क्रमेण पञ्चदश तिथयः भवन्ति।

वसुदेवस्य देवक्यां जातः अष्टमः पुत्रः श्रीकृष्णः।

''प्रथमाः तत्रैव तिष्ठन्तु। द्वितीयाः एकं पदं पुरतः आगच्छन्तु। तृतीयाः त्रीणि पदानि पुरतः आगच्छन्तु'' इति व्यायामाचार्यः आदिशति।

प्रतिमासं प्रथमे दिवसे कर्मकराणां वेतनं दीयते।

श्रावणत् परं अष्टमे दिने कृष्णः अवातरत्।

अद्य एप्रिल्मासस्य द्वाविंशं [द्वाविंशतितमं] दिनम्।

श्रीरामस्य जन्मदिनं चैत्रशुक्लनवमी तिथिः।

'राजन्' शब्दस्य सप्तमीं विभक्तिं वद।

अस्य पुस्तकस्य चतुश्चत्वारिंशे पुटे एकं चित्रं अस्ति।

कन्यकाः अष्टादशे वयसि, बालकाः एकविंशे वयसि च विवाहं अर्हन्ति इति राजकीयनियमः।

अवातरत् *அவதரித்தார்.* वितर *கொடு.* पटुतरः *மிகத்திறமையுள்ளவன்.* शीलानि *நல்லொழுக்க முறைகள்.* लभते *பெறுகிறான்.* लभेते *(இருவர்) பெறுகின்றனர்.* कन्दुकखेला *பந்து விளையாட்டு.*

*பயிற்சி: ஸம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்க்கவும்.*

1. *எனது நான்காவது பெண் கௌரி.*
2. *18வது அறையில் மூன்று வெளிநாட்டவர்கள் வசிக்கிறார்கள்.*
3. *நக்ஷத்திரங்களில் 22 வது சிரவணம். 27வது ரேவதி.*

4. மஹாபாரதப் போரின் 15வது நாளில் துரோணர் இறந்தார்.

5. ராமன் 25வது வயதில் காடு சென்முர்.

6. சிறுவர்கள் 5வது வயதில் பள்ளி செல்கிமுர்கள்.

7. 10வது வகுப்பில் 95 பையன்கள் படிக்கிமுர்கள்.

எண்ணுல் எழுதுக:

एकोनचत्वारिंशत्, द्विचत्वारिंशत्, ऊनपञ्चाशत्, चतुःषष्टिः, शतं, सहस्रम्।

எழுத்தால் (ஸம்ஸ்க்ருதத்தில்) எழுதுக: 19, 29 39, 80, 85, 95,

# एकत्रिंश पाठः பாடம் 31

## सन्धिः - अच् सन्धिः - अपवादाः

அச்ஸந்த்திகளில் விலக்குவிதிகள் — அபவாதங்கள்

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் கூறல் என்பது மரபு. மொழியின் வழக்கில் உள்ள சொற்களின் ஒற்றுமை-வேற்றுமைகளை நுட்பமாய் ஆராய்ந்து ஏற்ற பொதுவிதி அமைத்தல் இலக்கணமாகும். இது தொன்மையானதும் நவீனமானதுமான எல்லா மொழிகளுக்கும் பொருந்தும். வழக்கிலுள்ள சொற்களுக்குத்தக்கபடி இலக்கணம் அமைக்கும் போது முன்னல் அமைக்கப்பட்டப் பொதுவிதிக்கு விலக்கு விதிகள் அமைக்க வேண்டியது தவிர்க்க முடியாதது. சென்ற பாடங்களில் கற்ற ஸந்த்தி விதிகளில் சிலவற்றின் விலக்கு விதிகளை இனிக்கற்போம். விலக்கு விதிகளை अपवादः அப்வாதங்கள் என்பர். இலக்கியத் துறையில் அவதூறு எனப் பொருள்படும். இந்தச் சொல் இங்கு இலக்கணத்தில் விலக்கு விதிகள் எனப் பொருள்படும்.

தீர்க்க ஸந்த்தி பற்றிய விதிக்கு அபவாதம் - விதிவிலக்கு சில இடங்களில் வரும். சில குறிப்பிட்ட சொல்லமைப்புகளில் தீர்க்கஸந்த்தி நேராது. शक+अन्धुः- शकन्धुः। (शकान्धुः அல்ல) शकन्ध्वादिषु पररूपं वाच्यम् என்று இந்த விதிவிலக்கு. शकन्धुः कर्कन्धुः

முதலிய சப்தங்களாலான கணம் இது. सीम+ अन्तः सीमान्तः। எல்லையின் முடிவு. இதுவே தலை வகிட்டைக் குறிப்பதானல் सीम+अन्तः = सीमन्तः। सीमन्तः केशवेशे என்று இதற்கு விதிவிலக்கு. இப்படி कुल+अटा = कुलटा (வேசி) सार + अङ्गः = सारङ्गः - மான். வேறுபொருளில் வந்தால் कुलाटा - வீடுவீடாகச் செல்பவள். साराङ्गः - உறுதியுள்ள அவயவங்கள் உள்ளவன். இங்கு पररूपसन्धि வந்துள்ளது. இருவார்த்தைகள் சேரும்போது ஸந்த்தியில் பின்னுள்ள வார்த்தையின் முதல் அச் எழுத்தின் வடிவம் பெறுவதே பரரூபஸந்த்தி.

ஸந்த்தியே வராமல் அப்படியே இருப்பது प्रकृति भाव सन्धिः அதஸ்சப்த ஈ ஊ என்ற எழுத்தில் முடிகிற துவிவசநபதங்கள் சேரும்போது ஸந்த்தியால் ஏற்படும் மாற்ற மில்லை.अमी+ईशाः अमी ईशाः என்றே நிற்கும். अमीशाः என மாறுது. अमू+ऊहौ = अमू ऊहौ என்றே. தீர்க்கஸந்திக்கது அபவாதம் இது. பின்னர் இது விளக்கப்பெறும்.

## गुणसन्धिः - குணஸந்த்தி

அ அல்லது ஆ விற்குப் பிறகு இ அல்லது ஈ, உ அல்லது ஊ, ரு அல்லது ரூ அல்லது லு வந்தால் இரண்டிற்கும் சேர்ந்து ஒரு குணம் வரும்.

அ,ஏ,ஓ என்ற எழுத்துக்களுக்கு குணம் என்று பெயர். अदेङ्गुणः என்பது பாணினியின் ஸூத்திரம்.

1 अ+इ, आ+इ, अ+ई, आ+ई=ए

2 अ+उ, आ+उ, अ+ऊ, आ+ऊ=ओ

3 अ+ऋ, आ+ऋ=अर्

இந்த ஸந்தியில் ऋ ऌ இவற்றின் உபயோகம் மிகக்குறைவு.

| | | |
|---|---|---|
| अ+इ=ए | नर+इन्द्रः=नरेन्द्रः | देव+इन्द्रः=देवेन्द्रः |
| आ+इ=ए | महा+इन्द्रः=महेन्द्रः | तथा+इति=तथेति |
| अ+ई=ए | नर+ईशः=नरेशः | गण+ईशः=गणेशः |
| आ+ई=ए | रमा+ईशः=रमेशः | महा+ईश्वरः=महेश्वरः |
| अ+उ=ओ | हित+उपदेश=हितोपदेशः | चन्द्र+उदयः = चन्द्रोदयः |
| आ+उ=ओ | गङ्गा+उदकं=गङ्गोदकं | रमा+उक्तं=रमोक्तं |
| अ+ऊ=ओ | जल+ऊर्मिः=जलोर्मिः | नव+ऊढः=नवोढः |
| आ+ऊ=ओ | यमुना+ऊर्मिः=यमुनोर्मिः | तथा+ऊर्ध्वं=तथोर्ध्वम् |
| अ+ऋ=अर् | देव+ऋषिः=देवर्षिः | सप्त+ऋषिः=सप्तर्षिः |
| आ+ऋ=अर् | महा+ऋषिः=महर्षिः | राजा+ऋषिः=राजर्षिः |

குணஸந்திக்கும் அபவாதம் (விதிவிலக்கு) உண்டு. अक्ष+ऊहिनी = अक्षौहिणी. अ+ऊ=ओ என்ற குண எழுத்து வராமல் औ என்ற விருத்தி எழுத்து வருகிறது. अ+ऋ=अर् என்று குணஸந்தி வராத மேலும் சில இடங்ககளும் உண்டு. ब्रह्म+ऋषिः = ब्रह्मर्षिः அல்லது ब्रह्मऋषिः। सप्त+ ऋषीणां = सप्तर्षीणां அல்லது सप्त ऋषीणां என. இங்கு ஸந்த்தி சேர்ந்தும் சேராமலும் உள்ள இரு ரூபங்களும் உண்டு. ऋण+ऋणं = ऋणार्णं என. இங்கு अ+ऋ = अर् என்ற குண எழுத்தான अर् வருவதற்குப்பதிலாக आर् என்ற விருத்தி எழுத்து வருகிறது. स्व+ईरिणी = स्वैरिणी। अ+ई = ए விற்குப்பதிலாக ऐ என்ற விருத்தி எழுத்து வருகிறது. வெகுகாலத்து வழக்கை யொட்டி இந்த விதிக்கு விலக்கு ஏற்படுகிறது.

## वृद्धिसन्धिः — விருத்திஸந்த்தி

अ அல்லது आ விற்குப் பிறகு ए அல்லது ऐ வந்தால் இரண்டிற்கும் பதிலாக ऐ வரும்.

अ அல்லது आ விற்குப் பிறகு ओ औ வந்தால் இரண்டிற்கும் பதிலாக औ வரும்.

உதாரணங்கள்

अ+ए=ऐ — अद्य+एव=अद्यैव, तव+एव+तवैव, ममैव, चैव।
आ+ए=ऐ — तथा+एव=तथैव, सदा+एव+सदैव, वनितैव।
अ+ऐ=ऐ — तव+ऐश्वर्यं=तवैश्वर्यं, मम+ऐश्वर्यं =ममैश्वर्यं।
आ+ऐ=ऐ — महा+ऐश्वर्यं=महैश्वर्यं, राजा+ऐक्षत=राजैक्षत
अ+ओ=औ — मम+ओषधिः=ममौषधिः तव+ओषधिः=तवौषधिः।
आ+ओ=औ — महा+ओघः=महौघः, महा+ओषधिः=महौषधिः।
अ+औ=औ — जन+औदार्यम्=जनौदार्यम्, देव+औदार्यम्=देवौदार्यम्।
अ+औ=औ — महा+औषधम्=महौषधम्।

விருத்திஸந்த்திக்கும் அபவாதம் உண்டு. விதிவிலக்காக விருத்திக்குப்பதிலாக பரரூபஸந்த்தி ஏற்படுவது உண்டு. அதுவும் விகல்பமாக வரும். விகல்பம் சொல்பவரின் விருப்பத்தை ஒட்டி இதுவோ அதுவோ என்ற நிலே. बिम्ब+ओष्ठः = बिम्बौष्ठः (விருத்தி வந்தால்). बिम्बोष्ठः (பரரூபம் வந்தால்) (கோவை போன்ற உதடு) स्थूल+ओतुः = स्थूलौतुः स्थूलोतुः (பெரும் பூனை) शिवाय+ओं = शिवायों, இப்படிச்சில இடங்கள் விதிவிலக்கு உள்ளவை.

## यण् सन्धिः யண்ஸந்த்தி

इ उ ऋ ऌ என்ற நான்கு எழுத்துக்களும் அவைகளின் நெடில்களும், இவற்றைத் தவிர மற்ற உயிர் எழுத்துக்களுடன் சேரும்போது य् व् र् ल् என மாறுகிறது. य र ल व என்ற நான்கு எழுத்துக்கள் யண் எனப்படும். அதனுல் இதற்கு யண் ஸந்த்தி எனப்பெயர்.

इ அல்லது ई க்குப் பிறகு அதைத் தவிர வேறு உயிர் எழுத்து வந்தால் इ அல்லது ई க்குப் பதிலாக य् என்பது வரும்.

इ+अ=य — यदि+अपि=यद्यपि, इति+अपृच्छत्=इत्यपृच्छत्
इ+आ=या — अति+आचारः=अत्याचारः, इति+आदि=इत्यादि
ई+अ=य — गौरी+अस्ति=गौर्यस्ति
ई+आ=या — नदी+आगच्छति=नद्यागच्छति
इ+उ=यु — अभि+उदयः=अभ्युदयः, इति+उवाच=इत्युवाच
ई+उ=यु — गौरी+उत्तिष्ठति=गौर्युत्तिष्ठति

उ அல்லது ऊ விற்குப் பிறகு அதைத் தவிர வேறு உயிர் எழுத்து வந்தால் उ அல்லது ऊ விற்குப் பதிலாக व् வரும்.

उ+अ=व — सु+अच्छम्=स्वच्छम्, सु + आगतं = स्वाग.

ऋ விற்குப் பிறகு அதைத் தவிர வேறு உயிர் எழுத்து வந்தால் ऋ என்பது र् என்று மாறும்.

| | |
|---|---|
| ऋ + अ = र | धातृ + अंशः = धात्रंशः, पित्रर्थम् |
| ऋ + आ = रा | पितृ + आ =, पित्रा मात्रा |
| ऋ + ई = री | कर्तृ + ई = कर्त्री |
| ऋ + ए = रे | दातृ + ए = दात्रे, मात्रे |

இதற்கும் விதிவிலக்கு உண்டு. कवी+एतौ=कवी एतौ என்றே. कव्येतौ என்று ஆகாது. पटू+इमौ=पटू इमौ। अमू+आसाते = अमू आसाते। पट्विमौ अम्वासते என்று ஆகாது. பிரக்ருதிபாவ ஸந்த்தியில் இது பற்றிய விளக்கம் வரும்.

## अयवायाव सन्धिः — அயவாயாவஸந்த்தி

ए, ओ, ऐ, औ என்ற நான்கும் எந்த உயிரெழுத்துடன் சேர்ந்தாலும் अय् अव् आय् आव् என ஆகும்.

*சந்தி—இணைப்பு. இரண்டு எழுத்துக்கள் இணைய வேண்டும் இணைப்பில் ஏற்படும் மாறுதல். 1. முன் எழுத்துக்கோ 2. பின் எழுத்துக்கோ 3. இரண்டு எழுத்துக்களுக்குமோ ஏற்படலாம்.*

தீர்க்க—குண—விருத்தி ஸந்திகளில் இரண்டு எழுத்துக்களுக்குமே மாறுதல் ஏற்படுகிறது. யண்—அயவாயாவ ஸந்திகளில் முதல் எழுத்துக்கு மட்டுமே மாற்றம் காண்கிறது. உதாரணங்களில் காண்போம்.

अत्र+अहं, हरि+ईशः, मधु+उदकं என்று இணைக்கும் போது आ, ई, ऊ என்ற தீர்க்க எழுத்து, இணையும் இரண்டு எழுத்துக்களுக்குப் பதிலாக ஏற்படுகிறது. पश्य+इति=पश्येति, राधा+उवाच=राधोवाच என்ற குணஸந்தியிலும் இணையும் இரு எழுத்துக்களுக்குப் பதில் ஓர் எழுத்து ए ओ என வருகிறது. अद्य+एव=अद्यैव, तव+औषधं=तवौषधं என்ற விருத்தி ஸந்தியிலும் இணையும். இரு எழுத்துக்களுக்குப் பதில் ஓர் எழுத்து ऐ औ என வருகிறது. इति+अवदत्=इत्यवदत्, लघु+आगच्छ என்ற கூட்டலில் त् + य् + अ, घ् = व् + आ என்ற மாற்றமும் ஏற்படுகிறது. इ, उ என்பவை य् व् என மாறுகிறது. அதனால் முன் எழுத்தில் மாறுதல் யண் ஸந்தியில். அயவாயாவ ஸந்தி பற்றிய விளக்கம் பின்னால் வரும்.

அடுத்த பக்கத்திலுள்ள அட்டவணை எளிதில் ஸந்திகளைப் படம்பிடித்துக் காட்டும். இடது ஓரத்தில் இருப்பவை இணைப்பில் முன் எழுத்துக்கள். தலைப்பில் தடித்த எழுத்தில் உள்ளவை பின் இணைபவை. மாறுதல்கள் வரிசையாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

### அயவாயாவ ஸந்தியில் மற்றொரு மாறுதல்

बाले+उपरि=बालय् + उपरि = बाल उपरि
हरे+इति=हरय् + इति = हर इति
गुरो+एकः=गुरव् + एकः = गुर एकः
गुरौ+अयं=गुराव् + अयं = गुरावयं

**கவனிக்கவும்:** முதல் மூன்று உதாரணங்களில் நடுவில் ஒரு மாறுதல் காட்டப்பட்டு இறுதி விடை தரப்பட்டுள்ளது. நடுவில்

## தீர்க்க - குண - விருத்தி - யண் - அயவாயாவ ஸந்த்திகள்

| | अ | आ | इ | ई | उ | ऊ | ऋ | ए | ऐ | ओ | औ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| आ आ | आ | आ | ए | ए | ओ | ओ | अर्, आर् | ऐ | ऐ | औ | औ |
| इ, ई | य | या | ई | ई | यु | यू | यृ | ये | यै | यो | यौ |
| उ, ऊ | व | वा | वि | वी | ऊ | ऊ | वृ | वे | वै | वो | वौ |
| ऋ, ऋ | र | रा | रि | री | रु | रू | ऋ | रे | रै | रो | रौ |
| ए | अय | अया | अयि | अयी | अयु | अयू | | अये | अयै | अयो | अयौ |
| ऐ | आय | आया | आयि | आयी | आयु | आयू | | आये | आयै | आयो | आयौ |
| ओ | अव | अवा | अवि | अवी | अवु | अवू | | अवे | अवै | अवो | अवौ |
| औ | आव | आवा | आवि | आवी | आवु | आवू | | आवे | आवै | आवो | आवौ |

உள்ள மாற்றம் முன் குறிப்பிட்டுள்ள அயவாயாவ ஸந்தி முறைப்படி மாறி அமைந்தது. இறுதி விடையில் அதன்படி வந்த य्ம் व्ம் மறைந்து விட்டது. நான்காவதில் अव् என்ற மாற்றம் அப்படியே உள்ளது औ-आव् என மாறும்போது व् மறைவது அதிகம் வழக்கிலில்லை.

பயிற்சி : இணைந்த பதங்களைப் பிரித்து எழுதவும். ஸந்த்தியின் பெயரையும் குறிப்பிடவும். எந்த எந்த வடிவில் மாறியுள்ளன என்பதை விளக்கவும்.

1. अत्रैकः 2. कुत्रायं 3. रामस्यासनं 4. ममानुजः 5. तवेच्छा 6. गृहस्योपरि 7. तावुभौ 8. तदर्षयः 9. लक्ष्म्यागता 10. उभावपि 11. अण्वपि 12. तथेति ।

ஸந்த்தி சேர்த்து எழுதவும்:

1. आलये+उत्सवः 2. निशि+एकाकी 3. मम+उपकारः 4. अत्र+अपि 5. इति+इव 6. क+एते 7. तव+औषधं 8. लघु+आगच्छ 9. अद्य+इह+उत्सवः 10. तत्र+उद्याने 11. उद्याने+एव 12. राधा+इह+आगच्छति 13. कस्य+अपि इदं 14. विभीषणस्य+उपदेशः 15. कृष्णस्य+इङ्गितं 16. उत्तिष्ठ+उत्तिष्ठ 17. आगच्छ+आगच्छ 18. एहि+एहि 19. बालौ+उभौ+अत्र 20. उपरि+उपरि ।

## प्रकृतिभाव सन्धिः — பிரகிருதிபாவ ஸந்த்தி

துவிவசன (இருமை)ச் சொற்களின் முடிவில் வரும் ई ऊ ए என்ற எழுத்துக்கள் உயிர் எழுத்துக்களுடன் சேரும்போது யண் அல்லது அயவாயாவ ஸந்தியை அடைவதில்லை. அப்படியே இருக்கும். அதனால் அதை प्रकृतिभावसन्धिः (இயற்கை நிலையிலேயே இருக்கும் இணைப்பு) என்பர். இவைகளை உதாரணங்கள் மூலம் விளக்குவோம்.

1. இரு ஸன்யாசிகள் இங்கு வருகிறார்கள்.
   यती अत्रागच्छतः

2. இரு குரங்குகள் இங்குமங்கும் பார்க்கின்றன
कपी इतस्ततः पश्यतः ।

3. இரு கவிகள் எழுந்திருக்கிறுர்கள்.
कवी उत्तिष्ठतः

4. இரு அரசர்கள் ஓராசனத்தில் அமருகிறுர்கள்.
भूपती एकासन उपविशतः ।

5. இரு குருக்கள் கோவிலிலிருந்து வருகின்றனர்.
गुरू आलयादागच्छतः ।

6. இரு பசுக்கள் உரக்க ஹூம்பா என ஒலியைச் செய்கின்றன.
धेनू उच्चैः हुम्भारवं कुरुतः ।

7. இரு கயிறுகள் ஒரு பலகையைத் தூக்குகின்றன.
रज्जू एकं फलकं उद्धरतः ।

இங்கு ஸந்த்திகளின் விலக்குவிதிகள் தரப்பட்டுள்ளன. அவைகளுக்கு உதாரணமாகத் தரப்பட்டுள்ள 7 வாக்கியங்களைக் கவனிக்கவும். 1-4 உதாரணங்களில் यती कपी कवी भूपती என்ற நான்கு இருமைச் சொற்கள் ई ல் முடிந்தவை. அவை முறையே अ, इ, उ ए என்ற நான்கு எழுத்துக்களுடன் சேர்கின்றன. முன் சொன்ன விதிகளின்படி यत्यत्र, कपीतः, कव्युत्तिष्ठतः, भूपत्येकासने என ஸந்தி சேர்ந்திருக்க வேண்டும். (முறையே யண், தீர்க்க, யண், யண் ஸந்த்திகள் ஏற்பட்டிருக்க வேண்டும்) ஆனுல் அப்படிச் சேராமல் यती कपी कवी भूपती என்றே நிற்கும். ஸந்த்தி சேராது. நான்காவது உதாரணத்தில் एकासने उपविशतः என்ற இரு பதங்கள் சேர்ந்து அயவாயாவ ஸந்த்தி ஏற்பட்டு य् ம் மறைந்துவிட்டது கவனிக்கத்தக்கது.

அகாராந்த நபும்ஸகலிங்கச் சொற்கள் 1-2 விபக்திகளின் இருமையிலும் ஏழாம் வேற்றுமையின் ஒருமையிலும் ஒரே விதமாக இருக்கும். உதாரணம் फले, वने. फले + अपि, वने + अत्र எனச் சேர்க்கும்போது 1-2 விபக்திகளின் இருமைச் சொல்லா? ஏழாம் வேற்றுமையின் ஒருமையா என்பதைச் சந்தர்ப்பத்தையொட்டி நிதானித்துப் பின் இருமையாயின் फले

अपि, वने अत्र என்று ஸந்தியடையா திருப்பதையும், ஏழாம் வேற்றுமையின் ஒருமையாயின் फलेऽपि, वनेऽत्र என்று சேர்ந்துள்ளதையும் அறியலாம்.

| | |
|---|---|
| फलं फले फलानि | वनं वने वनानि |
| फलं फले फलानि | वनं वने वनानि |
| फले फलयोः फलेषु | वने वनयोः वनेषु |

அகாராந்த நபும்ஸகலிங்கத்தின் விபக்திச்சொற்கள் பாடத்தை மறுபடியும் கவனிக்கவும்.

எனவே பிரகிருதிபாவ ஸந்த்தியானது தீர்க்க-யண்-அயவாயாவ ஸந்த்திகளுக்கு விலக்குவிதி. பூர்வரூப ஸந்த்தி அயவாயாவ ஸந்த்திக்கு விலக்குவிதி. இவ்விரு விதிகளுக்கும் இலக்காகாதவையே பொதுவிதிக்கு இலக்காகும்.

5-6-7 உதாரணங்களைப் பாருங்கள். गुरू, धेनू, रज्जू என 'ஊ' வில் முடியும் மூன்று இருமைச் சொற்கள். அவை முறையே आ, उ, ए என்ற மூன்று எழுத்துக்களுடன் சேரும்போது गुर्वालयात्, धेनूच्चैः, रज्वेक என்றவாறு முறையே யண்-தீர்க்க-யண் ஸந்திகளை அடையாமல் அப்படியே இருக்கின்றன (பிரகிருதிபாவம்).

வேறு மூன்று உதாரணங்களைப் பாருங்கள்.

8. இரு சிறுமிகள் தோட்டத்தில் விளையாடுகின்றனர்.
कन्ये उद्याने विहरतः ।

9. அவருடைய இரு மனைவிகளும் கடவுளை வணங்குகின்றனர்.
तस्य द्वे अपि भार्ये ईश्वरं नमतः ।

10. ராமன் இரண்டு பழங்களைக் கொண்டு வருகிறான்.
रामः द्वे फले आनयति ।

कन्ययुद्याने (कन्य उद्याने) द्वेऽपि, भार्ययीश्वरं (भार्य ईश्वरं) फलयानयति (फल आनयति) என்று மாறுமல் அப்படியே இருப்பது பிரகிருதிபாவஸந்த்தி.

# पूर्वरूप सन्धिः — பூர்வரூபஸந்த்தி

பதத்தின் முடிவிலுள்ள ए ओ என்ற எழுத்துக்களுக்கு மேல் अ குறில் எழுத்து வந்தால் முன் எழுத்தான ए, ओ வில் अ மறைந்து முன் எழுத்தின் உருவத்தைப் பெறும். இதைப் பூர்வரூபஸந்த்தி என்பர். 'அ' என்ற எழுத்து மறைந்ததை ऽ எனக் கோடிட்டுக் காட்டுவர்.

1. *இறைவனே ! தகாதவனானாலும் என்னிடம் தயை காட்டும்.*
   देव ! अनर्हे + अपि (अनर्हेऽपि) मयि दयां कुरु ।
2. *அவனுக்குப் பலாப்பழத்தில் அதிக விருப்பம்.*
   तस्य पनसफले + अधिका (फलेऽधिका) प्रीतिः ।
3. *ஸீதை காட்டிலும் ராமனைப் பின்தொடர்ந்தாள்.*
   सीता वने + अपि (वनेऽपि) रामं अनुससार ।
4. *பாரத நாட்டில் பல புனிதமான ஆறுகள் ஓடுகின்றன.*
   भारतदेशे + अनेकाः (देशेऽनेकाः) पुण्याः नद्यः प्रवहन्ति ।
5. *ஆசிரியரே ! இவன் என் பிள்ளை. அவனுக்குப் பாடம் கற்பியுங்கள்.*
   गुरो + अयं (गुरोऽयं) मम पुत्रः । तं पाठयतु भवान् ।
6. *சம்புவே ! நீ ஸம்ஸ்கிருதம் படிக்கிறாயா?*
   शंभो + अपि (शंभोऽपि) त्वं संस्कृतं पठसि?
7. *இந்துவே ! அடிக்கடி அங்கே போகாதே.*
   इन्दो + असकृत् (इन्दोऽसकृत्) तत्र मागच्छ ।
8. *நேருவே ! தினமும் நாங்கள் உங்களை நினைக்கிறோம்.*
   नेहरो + अनुदिनं (नेहरोऽनुदिनं) वयं त्वां स्मरामः ।

*பயிற்சி: ஸந்த்தி பிரித்து அதன் பெயரையும் குறிப்பிடவும்.*

१. राम त्वं अत्रैवाद्य वस ।

२ आलयस्याग्रतः पुष्करिणी वर्तते ।

३ ध्वजस्तम्भस्योपरि पताका लसति ।
४ सीतापि वनं गच्छतीति साकेतस्त्रियः अरुदन् ।
५ सूर्यः सर्वेषां प्राणान् आदायोदेति, आदायस्तमेति ।

*பயிற்சி: ஸந்த்தி சேர்த்து அதன் பெயரையும் குறிப்பிடவும்.*

बाला + उपवने + क्रीडति ।
अद्य + एकादशी + अतः माता + उपवसति ।
अद्य + अत्र + एव + उपविश्य संलपामः ।
इति + उक्त्वा तौ + उभौ गृहं अगच्छताम् ।

## द्वात्रिंशः पाठः பாடம் 32

### தாது ரூபங்கள் कृ — कर् செய்ய

### 8-வது விகரணம் ஸகர்மகம் (प)

| | | | |
|---|---|---|---|
| लट् | करोति | कुरुतः | कुर्वन्ति |
| | करोषि | कुरुथः | कुरुथ |
| | करोमि | कुर्वः | कुर्मः |
| लङ् | अकरोत् | अकुरुतां | अकुर्वन् |
| | अकरोः | अकुरुतं | अकुरुत |
| | अकरवं | अकुर्व | अकुर्म |
| लोट् | करोतु | कुरुतां | कुर्वन्तु |
| | कुरु | कुरुतं | कुरुत |
| | करवाणि | करवाव | करवाम |
| विधिलिङ् | कुर्यात् | कुर्यातां | कुर्युः |
| | कुर्याः | कुर्यातं | कुर्यात |
| | कुर्यां | कुर्याव | कुर्याम |

| | | | |
|---|---|---|---|
| लिट् | चकार | चक्रतुः | चक्रुः |
| | चकर्थ | चक्रथुः | चक्र |
| | चकार-चकार | चकृव | चकृम |
| लट् | करिष्यति | करिष्यतः | करिष्यन्ति |
| | करिष्यसि | करिष्यथः | करिष्यथ |
| | करिष्यामि | करिष्यावः | करिष्यामः |
| लृङ् | अकरिष्यत् | अकरिष्यतां | अकरिष्यन् |
| | अकरिष्यः | अकरिष्यतं | अकरिष्यत |
| | अकरिष्यं | अकरिष्याव | अकरिष्याम |

*கீழே சில உதாரணங்கள்*

कुलालः घटं करोति।

*குயவன் குடம் செய்கிறான்.*

किं करोमि? क यामि?

*என்ன செய்வேன்? எங்கு செல்வேன்?*

कुरु कर्मैव तस्मात् त्वम् ।

*அதனால் நீ கர்மாவையே செய்*

ह्यः त्वं किं अकरोः?

*நேற்று நீ என்ன செய்தாய்?*

श्वः कार्यमद्यैव कुर्यात् ।

*நாளை செய்யவேண்டியதை இன்றே செய்யவேண்டும்.*

किं करिष्यति वै यमः?

*எமன் என்னதான் செய்வான்?*

चकार चरितं कृत्स्नम् ।

*சரித்திரம் முழுவதையும் இயற்றினார். (செய்தார்).*

यत्करोषि यदश्नासि तत्कुरु मदर्पणम् ।

*எதைச் செய்கிறாயோ, எதைச் சாப்பிகிறாயோ அதை எனக்கு அர்ப்பணம் செய்.*

साधु नाकरवम् ।

நான் நன்றாகச் செய்யவில்லை.

ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்க்கவும்.

1. குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்.
2. நீர்களிலிருந்து பூமி தோன்றிற்று.
3. செய்யவேண்டிய வேலையைச் செய்.
4. நாம் தினந்தோறும் என்ன செய்கிறோம்?
5. இந்த மனிதர்கள் அந்த வேலையைச் செய்யட்டும்.
6. ஒரு தட்டான் தங்க நகையைச் செய்தான்.
7. நீ என்ன செய்கிறாயோ அதையே செய்.
8. நான் சிவனுடைய தவத்தைக்கூட நாசஞ் செய்வேன்.
9. வால்மீகி இராமாயணத்தைச் செய்தார். (இயற்றினார்)
10. கௌதம புத்தர் வீட்டைவிட்டுப் போகும் எண்ணத்தைச். செய்தார். (வீட்டைவிட்டுப் போகநினைத்தார்.

# त्रयस्त्रिंशः पाठः — பாடம் 33

## विसर्गसन्धिः - விஸர்க்கஸந்த்தி

**முன்னுரை:** விஸர்க்கம் (:) ஒரு தனி எழுத்தல்ல. உயிர் எழுத்துடன் இணைந்து காணப்படும். தனி உச்சரிப்பு கிடையாது. இவ்விபரங்களை ஆரம்பப்பாடத்தில் படித்தோம். விஸர்க்கத்திற்கு முன்னால் अ முதல் औ வரை உயிர் எழுத்துக்களும் விஸர்க்கத்திற்குப்பின் உயிர் எழுத்துக்கள் அல்லது மெய்யெழுத்துக்களும் வரும்போது ஏற்படும் மாறுதல்கள் விஸர்க்கஸந்த்தி என்று குறிப்பிடப்படுகின்றன. இப்பாடத்தில் அவற்றைக் கற்போம்.

மெய்யெழுத்துக்களை வர்க்க எழுத்துக்கள் 25, அந்தஸ்த்த எழுத்துக்கள் 4, ஊஷ்ம எழுத்துக்கள் 4 என்று ஆரம்பப்பாடத்தில் கற்றோம். இப்போது அவற்றை கடினம் மிருது என்று இருவகைப்படுத்திப் பிரிக்கிறோம்.

கடின எழுத்துக்கள் : வர்க்கத்தின் முதல் இரண்டு எழுத்துக்களான क ख च छ ट ठ त थ प फ ஆகியவை श ष स இவையாகும்.

**மிருது எழுத்துக்கள்:** வர்க்கத்தின் 3, 4, 5 வது எழுத்துக்களான ग घ ङ, ज झ ञ, ड ढ ण, द ध न, ब भ म ஆகியவை य र ल व ह இவையாகும். கடின எழுத்துக்கள் 13, மிருது எழுத்துக்கள் 20. இனி விதிகளைக் காண்போம்.

1. **उत्वसन्धिः** — உத்வஸந்த்தி. अ (குறில்) விற்கும் மேல் உள்ள விஸர்க்கம், अ அல்லது மிருதுவான மெய்யெழுத்துக்கள் மேலே வரும்போது उ என்று மாறும். விஸர்க்கம் उ வாக மாறுவதால் उत्वसन्धि என்கிறோம். இது விஸர்க்கத்தின் முன் உள்ள अ வுடன் சேரும்போது குணஸந்த்தியை அடைகிறது. अ+उ=ओ என. அப்போது பின்னதாக வரும் अ (குறில்) முன் எழுத்தில் மறைந்து பூர்வரூபஸந்த்தியை அடைகிறது.

अ + : + अ அல்லது மிருதுவான மெய்யெழுத்து : = उ என்பது சூத்திரம்.

உதாரணம் -: बालः + अयं இங்கு अ விற்கு மேல் : உள்ளது. அதற்கு மேல் अ (குறில்) உள்ளது. விஸர்க்கம் उ வாக மாறுகிறது. बाल-उ-अयं சேர்ந்து குணஸந்த்தி बालो + अयं பதத்தின் முடிவிலுள்ள ओ வின் மேலுள்ள अ மறைகிறது. மறைவைக்காட்ட ऽ என்ற குறி. बालोऽयं என்பது விடை.

१ बालः + अयं, बाल-उ + अयं, बालो + अयं, बालोऽयं
२ कः + अत्र, क-उ + अत्र, को + अत्र, कोऽत्र
३ सुन्दरः + अपि, सुन्दर-उ + अपि, सुन्दरो + अपि, सुन्दरोऽपि

உதாரணம் 2: नृपः + जयति । अ விற்கு மேல் உள்ள விஸர்க்கம் + ज என்ற மிருது அக்ஷரம். விஸர்க்கம் उ வாகி குணஸந்தி—ओ. नृपो जयति என்று விடை.

१ वीरः + गच्छति, वीर-उ + गच्छति, वीरो गच्छति ।
२ गजः + धावति, गज-उ + धावति, गजो धावति ।
३ मेघः + वर्षति, मेघ-उ + वर्षति, मेघो वर्षति ।
४ शिष्यः + वदति, शिष्य-उ + वदति, शिष्यो वदति ।

2 **लोपसन्धिः** — லோபஸந்த்தி. अ (குறில்)வுக்கு மேலுள்ள விஸர்க்கம், आ முதல் औ வரை உள்ள உயிர் எழுத்துக்கள் மேலே வரும்போது மறையும். லோபஸந்த்திக்குப் பிறகு வேறு ஸந்த்திகள் தொடர்வதில்லை.

*1* बालः+आगच्छति-बाल आगच्छति । இதற்குப்பின் बालागच्छति என்றவாறு தீர்க்கஸந்தி வராது.

2 रामः + इह वसति-राम इह वसति । இதற்கு மேல் रामेह என குணஸந்த்தி வராது.

*3* सः + ईशं नमति-स ईशं नमति । सेशं என்று குணஸந்த்தி வராது.

*4* रामः + एवं वदति-राम एवं वदति । रामैव என விருத்தி ஸந்த்தி வராது.

*3.* **लोपसन्धिः**— லோபஸந்த்தி. आ வுக்கு மேல் உள்ள விஸர்க்கம் உயிர் எழுத்துக்கள் அல்லது மிருதுவான மெய் எழுத்துக்கள். மறையும் என்பது சூத்ரம்.

बालाः + अवदन् = बाला अवदन् ।
काकाः + आकाशे डयन्ते = काका आकाशे डयन्ते ।
कन्याः + इतस्ततो गच्छन्ति = कन्या इतस्ततो गच्छन्ति ।
भक्ताः + ईशं स्तुवन्ति = भक्ता ईशं स्तुवन्ति ।
जनाः + एकत्र मिलन्ति = जना एकत्र मिलन्ति ।
वत्साः + औषधं पिबन्ति = वत्सा औषधं पिबन्ति ।

இங்கும் दीर्घ, गुण, वृद्धिसन्धि கள் வருவதில்லை.

பயிற்சி 1 : ஸந்த்தி கூட்டி எழுதவும்.

१ रामः + विरामः + विरतः + मार्गः + नेयः + नयः + अनयः ।
२ दुर्लभः + दुर्गमः + दुर्गः + दुरावासः + दुरारिहा ।
३ धेनवः + आसायं तृणं चरन्ति ।
४ आर्ताः + विषण्णाः + नारायणशब्दं उच्चार्य सुखिनः + भवन्ति
५ देवः + न खलु कुशलः ।
६ श्रीसुब्रह्मण्येन रक्षितः + अहम् ।
७ क्रीडया श्रान्ताः बालाः + इतः + एव + आगच्छन्ति ।
८ विश्रवसः पुत्रः + रावणः + नाम राक्षसः + लङ्कायां अवसत् ।

## चतुस्त्रिंशः पाठः- பாடம் 34

### संक्षिप्तं अभिज्ञानशाकुन्तलम्

(कण्वस्याश्रमः । राजा दुष्यन्तः सेनापतिं परिजनं च विसृज्य एकान्ते विदूषकेन सह सम्भाषमाणो वर्तते ।

विदूषकः — महाराज भवता निर्मक्षिकं कृतम् । अस्य पादपस्य छायायां शिलातले भवान् निषीदतु । अहमपि सुखं आसीनो भवामि ।

राजा — अग्रतो गच्छ ।

विदूषकः — एतु भवान् । (उभौ परिक्रम्य उपविष्टौ)

राजा — माधव्य ! त्वया चक्षुषोः फलं न अवाप्तम् । त्वया दर्शनीयं न दृष्टम् ।

विदूषकः — ननु भवान् अग्रतो मे वर्तते?

राजा — सर्वः आत्मीयं कान्तं पश्यति । अहं तु तां आश्रमस्य ललामभूतां शकुन्तलां अधिकृत्य ब्रवीमि ।

विदूषकः — किं भवान् तापसकन्यकां अभ्यर्थयते?

राजा — पौरवाणां मनः न परिहार्ये वस्तुनि प्रवर्तते । मुनेरपत्यमपि सा अप्सरसः संभूता।

विदूषकः — यथा पिण्डखर्जूरैः उद्वेजितः तिन्त्रिणीं अभिलषेत्, तथा स्त्रीरत्नानि परिभुञ्जानः भवान् इमां अभ्यर्थयते।

राजा — न त्वं एनां पश्यसि। तेन एवं अवादीः ।

विदूषकः — यत् भवतोऽपि विस्मयं उत्पादयति तत् रमणीयं खलु।

राजा — विधिना मनसा कृता स्त्रीरत्नसृष्टिः इयम्। अस्या रूपं अनर्घम्। विधिः कं वा अस्याः पतिं समुपस्थास्यति इति न जाने।

विदूषकः — तेन हि भवान् एनां लघु परित्रायताम्। अन्यथा कस्यापि तपस्विनः हस्ते पतिष्यति।

राजा — एषा परवती। गुरुजनोऽपि न सन्निहितः ।

विदूषकः — भवति तस्याः कीदृशो रागः?

राजा — सखीभिः साकं प्रस्थानसमये तया भावः कामं आविष्कृतः।

विदूषकः — तेन हि भवान् गृहीतपाथेयो भवतु। तपोवनं उपवनं भवतु ।

राजा — सखे, तपस्विभिः कैश्चित् परिज्ञातोऽस्मि। केन अपदेशेन पुनः आश्रमपदं गच्छावः? मार्गं चिन्तय।

विदूषकः — कः अपरः अपदेशो युष्माकं राज्ञाम्? नीवारस्य षष्ठं भागं उपहरन्तु इति ।

राजा — मूर्ख, अन्यमेव भागधेयं एते तपस्विनो निर्वपन्ति । सः रत्नराशीनपि विहाय अभिनन्द्यते । चतुर्भ्यो वर्णेभ्यो यत् धनं उत्तिष्ठति, तत् क्षयि । एते आरण्यकाः अक्षय्यं तपसः षष्ठं भागं नः ददति ।

(नेपथ्ये) हन्त सिद्धार्थौ स्वः ।

राजा — (कर्णं दत्वा) अये धीरप्रशान्तः स्वरः। तत् तपस्विभिः भवितव्यम्।

दौवारिकः — (प्रविश्य) जयतु जयतु भर्ता । एतौ द्वौ ऋषिकुमारौ प्रतिहारभूमिं उपस्थितौ ।

राजा — तेन हि अविलम्बं प्रवेशय तौ ।

उभौ — (प्रविश्य) विजयस्व राजन् !

राजा — (आसनादुत्थाय) अभिवादये भवन्तौ ।

उभौ — स्वस्ति भवते ।

राजा — (सप्रणामं परिगृह्य) आज्ञापयितुमिच्छामि ।

उभौ — भवान् आश्रमसदां इहस्थो विदितः । तेन भवन्तं प्रार्थयन्ते ।

राजा — किं आज्ञापयन्ति?

उभौ — तत्रभवान् कण्वो महर्षिः न सन्निहितः । ततः रक्षांसि नः इष्टिविघ्नं उत्पादयन्ति । भवान् नाथो भूत्वा रक्षतु ।

राजा — अनुगृहीतोऽस्मि ।

विदूषकः — (अपवार्य) एषा अभ्यर्थना इदानीं भवतोऽनुकूला ।

राजा — (स्मितं कृत्वा) रैवतक ! सारथिः मद्वचनात् उच्यतां, सबाणासनं रथमुपस्थापयेति ।

दौवारिकः — यत् देव आज्ञापयति । (इति निष्क्रान्तः)

उभौ — (सहर्षं) पूर्वेषां अनुकारिणि त्वयि इदं युक्तरूपम् । आपन्नानां अभयदाने पौरवाः दीक्षिताः खलु?

राजा — (सप्रणामं) गच्छतां पुरो भवन्तौ । अहमपि अनुपदं आगत एव ।

उभौ — विजयस्व (इति निष्क्रान्तौ)

परिजनः *பரிவாரம்.* एकान्ते *தனிமையில்* निर्मक्षिकं *ஈக்கள் கூட வராதபடி* पादपः *மரம்.* शिलातलं *கல்தரை.* निषीदतु *உட்காருங்கள்.* अग्रतः *முன்னதாக.* एतु *வாருங்கள்.* माधव्यः *விதூஷகனின் பெயர்.* अवाप्तं *பெறப்பட்டது.* आत्मीयं कान्तं पश्यति *தன்னைச் சேர்ந்தவனை (ளை-தை) அழகனுக்க் காண்பர்.* ललामभूतां *அணியாக உள்ள.* अधिकृत्य *பற்றி, குறித்து* अभ्यर्थयते *கோருகிறீர்.* (भवान् *உடன் சேர்வதால் பிரதமபுருஷன்)* तापसकन्यका *தவசியின் பெண்.* पौरवाः

புரு வம்சத்தில் பிறந்தவர்கள் परिहार्यं தவிர்க்கத்தக்கது. अपत्यं குழந்தை पिण्डखर्जूरैः उद्वेजितः பேரீச்சம்பழத்தால் திகட்டல் ஏற்பட்டு மிரண்டவன், तिन्त्रिणी புளி. परिभुञ्जानः அனுபவித்துக் கொண்டிருப்பவன். अवादीः சொன்னுய் अनघं குறையற்றது विधिः விதி, பிரம்மா. समुपस्थास्यति கொண்டு சேர்க்கப் போகிறது. लघु எளிதாக. परित्रायतां காப்பாற்றுங்கள். परवती வேறு ஒருவருடைய அதீனத்தில் இருப்பவள். गुरुजनः வீட்டில் உள்ள பெரியோர்கள். कीदृशः எத்தகையது. रागः ஆசை, कामं நன்கு. आविष्कृतं வெளிப்படுத்தப்பட்டது. गृहीतपाथेयः கட்டுச்சோறு எடுத்துக் கொண்டவனுக. उपवनं கேளிக்கைக்கான தோட்டம். परिज्ञातः இன்னுரென அறிமுகப்பட்டவன். अपदेशः சாக்கு, வியாஜம். आश्रमपदं ஆசிரமக்குடியிருப்பு. नीवारः காட்டில் தன் போக்கில் விளையும் உணவு தானியம், உழுது பயிரிடப்பட்டதல்ல. षष्ठो भागः ஆறில் ஒரு பங்கு. उपहरन्तु கொண்டு வாருங்கள், கொண்டு முன் வைப்பீர்களாக. भागधेयः வரி (இந்தச் சொல் புல்லிங்கம். भागधेयं என்ற நபும்ஸகலிங்கச் சொல் நல்வாய்ப்பு பாக்யம் எனப் பொருள் படும்). निर्वपन्ति அளிக்கிருர்கள். रत्नराशीनपि विहाय ரத்தினக் குவியல்களையும் ஒதுக்கிவிட்டு. अभिनन्द्यते பாராட்டப்பெறுகிறது. वर्णेभ्यः வர்ணத்தாரிடமிருந்து उत्तिष्ठति வெளிப்படுகிறது (நம்மை) நோக்கி வருகிறது, எதிர்கொள்கிறது. क्षयि அழியும் தன்மையுள்ளது. अक्षय्यं அழியும் தன்மையற்றது. आरण्यकाः காட்டில் இருப்பவர்கள். ददति தருகிருர்கள். (ददाति ददतः ददति) नेपथ्ये திரை மறைவில். सिद्धार्थः எதிர்பார்த்ததை அடைந்தவன், செயல் முடித்தவன். धीरप्रशान्तः தைரியம் மிக்கதும், அமைதியுள்ளது மான. स्वरः குரல் तत् तपस्विभिः भवितव्यं அதனுல் தவமுள்ள முனிவர்களாக இருக்க வேண்டும். दौवारिकः வாயில்

காப்பவன். भर्ता எஜமானன். प्रतिहारभूमिः வாயிலின் உள்ளே நுழைய அனுமதி எதிர்பார்த்து நிற்குமிடம். अविलम्बं தாமதமின்றி प्रवेशय வரச்செய். निष्क्रम्य வெளிக்கிளம்பி. प्रविश्य உள் நுழைந்து, உள்ளே வந்து अभिवादये வணங்கி என்னை அறிமுகப்படுத்திக் கொள்கிறேன். स्वस्ति நலம். भवते உமக்கு. परिगृह्य ஏற்று. आज्ञापयितुं உத்தரவிடப்படுவதற்கு, உத்தரவை ஏற்க. आश्रमसदां ஆசிரமத்திலிருப்பவருக்கு. इहस्थः இங்கு வந்திருப்பவர், विदितः அறியப்பட்டுள்ளவர். तत्रभवान् மரியாதைக்குரியவர். सन्निहितः அருகில் இருப்பவர். रक्षः ராக்ஷஸர் रक्षांसि ராக்ஷஸர்கள். इष्टिः யாகம். विघ्नं இடையூறு. नाथः துணைவன். अपवार्य (தனித்து நின்று) ஒதுங்கி இருந்து, பேசுவதைப் பிறர் அறியாமல் மறைத்துக் கொண்டு. अभ्यर्थना கோரிக்கை. रैवतकः வாயிற்காப்போனின் பெயர். मद्वचनात् நான் கூறியதாகச் சொல்லி. सबाणासनः வில்லுடன் கூடியது उपस्थापय ஆயத்தப்படுத்து देवः யஜமானன். पूर्वेषां अनुकारी முன்னோர்களைப் பின்பற்றிப் பணிபுரிபவன். अनुकारिणि பின்பற்றிப் பணிபுரிபவனிடத்தில் युक्तरूपं பொருத்தமானதெனக் கொள்ளத்தக்கது. आपन्नः நெருக்கடியிலுள்ளவன். துன்புறுபவன். अभयदानं பயமின்மையை அளிப்பது. पौरवः புருவம்சத்தில் வந்தவன் दीक्षितः முனைந்தவன். पुरः முன்னதாக. अनुपदं आगत एव உடனேயே (அடிகளைத் தொடர்ந்தவனாக) வந்து கொண்டே இருப்பவன்.

பயிற்சி: 1 இந்தப் பாடத்தைத் தமிழில் மொழிபெயர்க்கவும்.

2 परिज्ञातोऽस्मि, रत्नराशीनपि, नाथो भूत्वा, अनुगृहीतोऽस्मि, भवतोऽनुकूला, आगत एव, पुरो भवन्तौ இவைகளை ஸந்த்தி பிரித்து எழுதவும். ஸந்த்தியின்பெயர் என்ன?

3 केन अपदेशेन, पुनः आश्रमपदं, कः अपरः अपदेशः, सः रत्नराशीनपि, विहाय अभिनन्द्यते, यत् धनं, एते आरण्यकाः अक्षय्यं, नःददति, तपस्विभिः भवितव्यं, द्वौ ऋषिकुमारौ, हि अविलम्बं, ततःरक्षांसि, नः इष्टिविघ्नं, अभ्यर्थना इदानीं, सारथिः मद्वचनात्, त्वयि इदं, पौरवाः दीक्षिताः, अहमपि अनुपदं இவைகளை ஸந்தி சேர்த்து எழுதவும்.

4 अपदेशेन, उपस्थितौ, तपस्विनः, राशीन्, आपन्नानां இந்தச் சொற்கள் அமைந்துள்ள விபக்தியின் மற்ற இருவசனங்களை எழுதுக.

5 गच्छावः, उपहरन्तु, उत्तिष्ठति, आज्ञापयति இந்த நான்கு வினைச்சொற்கள் அமைந்துள்ள லகாரத்தில் மூன்று புருஷங்களிலும் உள்ள ரூபங்களை எழுதுக.

*திருத்திக்கொள்க பக்கம் 61ல் 7ம் வரி* प्रगृह्यं *என்பதை* प्रकृति भावः *என. பக்கம் 63. வரி 9 ஐ 13.* ऋ + ऋ = ऋ *உதாஹரணம்.* पितृ + ऋणं = पितृणं *என.*

**திருத்திக்கொள்க : பக்கம் 61ல் 7ம் வரி**

प्रगृह्यं *என்பதை* प्रकृतिभावः *என பக்கம் 63 வரி 9ஐ 13.* ऋ + ऋ = ऋ *உதாஹரணம்.* पितृ + ऋणं = पितॄणं *என.*

கடந்த பல ஆண்டுகளில் இதன் மூலம் பயிற்சி பெற்றவர்கள் தாமே ஆங்காங்கு ஆரம்ப வகுப்புகளை தொடங்கி எமது சேவையில் பங்கு கொண்டுள்ளனர். அவர்களது ஈடுபாடு பெரிதும் போற்றத்தக்கது.

## ஸம்ஸ்கிருதஸ்ரீ பாடமாலா

ஸம்ஸ்கிருதஸ்ரீ பத்திரிகையில் வெளியான பாடங்களை மட்டும் தனியே தொகுத்து ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா என்ற 7 பாகங்கள் கொண்ட தொகுப்பு வெளியாகியுள்ளது. இவை அவ்வப்போது பெறும் அனுபவங்கள் மூலம் மறு பரிசீலனைக்கு உட்படுத்தப் பட்டுள்ளன. இவற்றின் துணைகொண்டு ஸம்ஸ்க்ருதத்தை எழுத்துப் பயிற்சியில் தொடங்கி காவியங்கள் வரை எளிதில் கற்கலாம். ஆங்கிலத்திலும் பாடமாலா 1—2 பாகங்கள் வெளியாகியுள்ளன.

ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா என்ற தொகுப்பை பெறுபவர்கள் அவற்றில் வெளியாகியுள்ள பாடங்களைப் பயின்று பாடங்களின் இறுதியில் கொடுக்கப் பெற்றுள்ள பயிற்சிகளைத் தாமே எழுதி புக் போஸ்டு மூலம் Book-post Posted under clause 114 (8) of P & T Guide : PUPILS EXERCISE என்று உரைமீது குறிப்பிட்டு (உரையின் வாயை ஒட்டாமல்) எமக்கு அனுப்பினால் திருத்தி அனுப்புகிறோம். சந்தேகங்களுக்கு விளக்கம் தருகிறோம். இந்தச் சேவையைப் பெற விரும்புபவர் தபால் செலவிற்கென ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாகம் ஒன்றுக்கு ரூ 20-00 அனுப்பவும். மேலும் தாங்கள் விரும்பும் தொகையை நன்கொடையாக அளிக்கலாம்.

ஸம்ஸ்க்ருத எஜுகேஷன் ஸொஸைடி,
98-99, லஸ்சர்ச் ரோடு,
சென்னை 600 004.

# ஸம்ஸ்கிருதத்தை எளிதில் கற்க எமது பாட நூல்கள்

| | | விலை ரூ. |
|---|---|---|
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா | | |
| 1—7 பாகங்கள் ஒவ்வொன்றும் | | 25.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ பாடமாலா | | |
| (ஆங்கிலம்) | முதல் பாகம் | 25.00 |
| | இரண்டாம் பாகம் | 30.00 |
| ஸம்ஸ்க்ருத அகராதி | | |
| தமிழ் - ஆங்கிலப் பொருளுடன் | | 120.00 |
| தாதுமாலா (300 தாதுக்கள்) (முதல் பாகம்) | | 80.00 |
| சப்தமஞ்ஜரீ | | 25.00 |
| அவ்யய கோசம் | | 100.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ ஆண்டிதழ்கள் | | |
| 13 முதல் 21 வரை | | 15.00 |
| 22 முதல் 25 வரை | | 20.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ வெள்ளிவிழா மலர் | | 20.00 |
| ஸம்ஸ்க்ருதஸ்ரீ மாதப் பத்திரிகை | | 4.00 |
| ஆண்டு சந்தா | | 40.00 |
| ஆயுள் சந்தா | | 400.00 |

புத்தகம் அனுப்ப தபால் செலவு தனி

விவரமறிந்து முன் பணம் அனுப்பவும்

தொடர்பு கொள்ள முகவரி :-

**ஸம்ஸ்கிருத எஜுகேஷன் ஸொஸைடி,**

148-150, லஸ் சர்ச் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 600 004.

*Lasertypeset & Printed at :*
V.K.N. ENTERPRISES,
8/1, Dr. Rangachari Road, Mylapore, Chennai-4, ✆ 2495 0775.